# என் அன்பு நண்பர்கள்

---

புள்ளி வைக்காது-கள்ளங் கபடமற்ற நட்பால் போட்ட
அன்புக்கோலம்-பள்ளி நட்பு, ஆண்டுகள் பலபோனபின்பும்
அழியாத கோலம்-அணையாத தீபம்






பாடம், படிப்பு, ஆட்டம், பாட்டமான அழகிய
பள்ளி வாழ்வு இறை தந்த கொடையாக
இன்று வரை நிலைக்கும் நட்பு

பள்ளி வாழ்வும் கலைந்த கனவாக
நண்பராய் சிலரே நெஞ்சில் நிலைக்க
எண்ணி இன்புற இன்பக் கனவாய்
இனிய நினைவாய் நிலைத்த நட்பு

எண்ணிக்கையின் பெருக்கமல்ல- நட்பு
எண்ணங்களின் பரிணாமம்,
புரிந்துணர்வின் பேரின்பம்.

பாசமாய் மச்சான் என அழைக்கும் ஜோய்-
நேசமாய் ரவி என அழைக்கும் அன்டன்
Pax என விளிக்கும் அன்னதாஸ்
டேய் என்னடா செய்கிறாய்-ஜெகன்

ஐயா என அழைக்கும் கிறிஸ்டி
ரவி என கூவி மகிழும் செயஸ்தியான்
ஹலோ ரவி என்னும் சுவி

நட்பின் மற்றோர் பரிமாணத்தில்
அறுசுவையிலும் இனிதான அறிவுப் பசிக்கு உணவாய்
அரிய நண்பர்களாய் ஆசான்களாய்
அருட் தந்தையர் மிலர், போல் சற்குணநாயகம்
CP.இராஜேந்திரம் , றெக்ஸ் ஜோசப்
நன்னூல் வழியாய் குருவாய் மகான் ஓஷோ

பெறா மகனாய் எனை அன்பு செய்த
என் பெற்றோராய் -அன்புத் தம்பதிகளாய்
ரிச்சர்ட் பெர்னான்டஸ்-மம்மி, றெக்ஸ் -ராணி
ஜஸ்டின் இராஜேந்திரம் -உமா டீச்சர்

என்னைத் தன் குழந்தையாய் கண்ட
அருட் தந்தை ஹரல்ட ஜே வெபர்
அன்புகாட்டிய அருட் தந்தையர், மிலர்
டெல்மாமோ, ஹேபியர், லோரியோ
அன்போடு பெயர் மாற்றி *Pax* என அழைத்த ஆசான்
சவரிராஜா மாஸ்டர்

கவிதை உறவாய் வந்து என் கவிதைகளுக்கு தோள் தந்து
கவிஞனாய் நான் எழுத இரசிகனாய் என்னை ஊக்குவித்த
கிறிஸ்டி நல்லரெத்தினம்-இரசிகனின்றி
கவிஞனில்லை, இரசனையின்றி கலைகளுமில்லை

நட்பும் கலையே நண்பா விழுந்து எழுவதால்
நாம் புரிந்து கொள்கின்றோம்-பள்ளிப்பருவ நட்பு
உதறுகாய் போல் ஒட்டிக கிடந்தது
காலம் செல்ல பழகிக் களித்து பாசம் கனிய
ஓடும், புளியம்பழமுமாய் கருத்துகளுக்கு மதிப்பளித்து
மெல்ல துறவு பூணுகின்றது.?

காலம் போகின்றது, இனி காண்போமா கேள்வியானது
வாழ்வில் தேடல் என்று ஏதும் எனகில்லை
எல்லாம் எனக்குள்ளே என்பதைஅனுபூதியில் உணர்வதே
வாழ்வின் இரகசியம்.

இரு வழிப்பதை வாழ்வு-
ஜனனம், மரணம் -ஒரு கதவின் இரு பக்கங்கள்
வாழ்வு அழிவதில்லை-
மரணம் வழியாய் தொடரும் புதுப்பயணம்

இறை தந்த அன்புக் கொடையே நட்பு
காலில் முள் தைத்தால் பிடுங்கி விடலாம்
கருத்தில் முள் தைத்தால் புரிந்து கொள்ளலாம்
நட்பை துறந்து விடலாமோ?
நட்போ அரிதிலும் அரிதானது.
அன்பைப்போல் உயர்ந்தது ஏதுமில்லை
அன்பே சிவம் பொய்யில்லை

உன்னோடு நான் கொண் நட்பு-அகவை அறுபதை
தாண்டியும் இளமையோடு ஜொலிக்கின்றது
“ஜோய்” என அழைக்கும்போது, இதழ்கள்
இனிக்கின்றது, மனம் அக்களிக்கின்றது

மச்சான் என அழைக்கும் ஒரே ஒரு உறவு
இறைவன் தந்த இன்ப உறவு
இன்றொ கணவன் மனைவியராய்-என்
அன்பு வானில் உலாவரும் தேன் நிலவு

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-28-03-2023*

# இறை தந்த வரம் உன் அன்பு

---

இறை தந்த வரம் நண்பா நீ எனக்கு
அறியாக் குழந்தைகளால் அரிவரி படிக்கும்போது
ஆரம்பமான நட்பு, கல்லூரியில்
ஆல்போல் தழைத்து அருகாய் வேரூண்டிய அன்பு




ஒன்றாய் செபித்து, நன்றாய் விளையாடி
உடன் பிறப்புகளாய் ஒன்று சேர்ந்த உறவு
காணும்போதெல்லாம் "மச்சான்" என
வாஞ்சையோடு அழைக்கும் அரிய நட்பு

நூல் நிலையத்தில் தேடிக் கற்ற நூல்கள் பல,
ஒன்றாய்ப் பார்த்து இரசித்த சினிமாக்கள் பல
நன்றாப் படிக்க, நல்நண்பனாய், நல்வழி
நடக்க நற்தோழனாய் வாய்த்த உன் உறவு

நாடு கடந்தும் என்னை மறக்காத அன்புறவு
நலம் வேண்டி அன்போடு உதவும் பண்பு-ஆபத்துக்
காலத்தில் அரிய கொடையாய் இறை தந்த உறவு,
என்றும் இறைமகனாய் என் வாழ்வில் உன் வரவு

குசேலனுக்கு கண்ணனாய் நீ எனக்கு
நான் செய்யாத தவத்திற்கும், இறை
தந்த பரிசு, ஏழைகளை அன்போடு நேசித்து
அள்ளிக் கொடுக்கும் வள்ளல்களின் வாரிசு

வானூறும் நிலவும், தேன் ஊறும் மலர்களும் சாட்சியாக,
என் சித்தம், நினைப்பு, செய்கை உள்ளளவும், நண்பனே,
சத்தியமாய் என் உள்ளம் உன்னை ஒருபோதும் மறவாது

பிறவாமை வேண்டும், மீண்டும்
பிறப்பு உண்டு என்றால்- என்றும்
நின்னை மறவாமை வேண்டும்

மஞ்சளும், மலர்களும், மாறாத புன்னகையும்
என்றும் உன் குடும்பத்தில் நிலைக்க, பல்லாண்டு
பல்லாண்டு வாழ்க என பாசத்தோடு வாழ்த்தும் நண்பன்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-2-04-2024*

# என் பிரியமானவனுக்கு-ஜோய்

---

**உடுக்கை இழந்தவன் கைபோல் ஆங்கே**
**இடுக்கண் களைவதாம் நட்பு**-வள்ளுவர்






நன்றி சொல்ல வார்த்தையின்றி நாத்தடுமாற-
இறை கொடை நீ என்று இறைவனை மனம்போற்ற
குசேலனுக்கு கண்ணனாய் நண்பா நீ எனக்கு

படிக்கும்போதும் பாசமாய் என்னை நேசித்தாய்
பலகாதம் கடல் கடந்தும்-இன்றும்
மாறாத பாசத்தோடு என்னை நேசிக்கின்றாய்

இறை தந்த கொடையே என்றும் நீ நலம் வாழ-
இறைவனை வேண்டிட என் நெஞ்சம் மறவாது
இறைவன் நம்மோடு என்பதற்கு -இம்மானுவேல்
உன்னைத் தவிர எனக்குச் சான்றேது



நாளும், பொழுதும் உன் வாழ்வு சிறக்க
நலமோடு நீடுழி , நீயும் உன் உறவுகளும்
பல்லாண்டு சீரும், சிறப்போடும் வாழ,
நெஞ்சார வாழ்த்துகின்றேன்



கண்ணில் ஆனந்த கண்ணீர் துமிக்க
உன் அன்போ என்னை நினைவிலும் மகிழ்விக்க
நான் செய்யாத தவத்திற்கு-
இறை தந்த வரம் நீ

வானுறும் நிலவும், தேனாறும் மலர்களும் சாட்சியாக
என் சித்தம், நினைப்பு. செய்கை உள்ளவும்
என் பிரியமானவனே- என்னைப் பிரியாதவனே
என் நெஞ்சம் உன்னை மறவாது

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
*Pax Ravichandra*

# நண்பன்-ஜோய்

---

குகனுக்கு இராமனாய், குசேலனுக்கு கண்ணனாய்
கர்ணணிற்கு, மன்னன் துரியோதனாய்
தோழமை கொண்டவனோ
-இன்று எனக்கு நண்பனாய் வாய்த்தவன்
தன் வள்ளாண்மையால் -ஏழை
என்னையும் செல்வனாக்கி மகிழ்ந்தவன்.





முடி நரைத்து, உடல் தளர்ந்து, மூப்பு நானடைந்தாலும்-
என் நடை தளர்ந்து, ஊன்றுகோல்தான் கிடைத்தாலும்
ஒளியிழந்து விழிகள் பார்க்கும் திறன் இழந்தாலும்
மொழியிழந்து ஊமையாய் போனாலும்
என் உயிரில் கலந்த உறவே-உன்னை ஒருபோதும்
என் இதயம் மறவாது

மண்ணில் என்னுடல் மக்கி மறைந்தாலும்
விண்ணில் என்னுயிர் ஓய்வு கொண்டாலும்
நம் உயிர் நட்பிற்கு காலத்தால் அழிவு இல்லை
கண் மறையும் தேகத்தால் மறைவு இல்லை.




நன்றி சொல்ல வார்த்தையில்லை
நட்பைக் கவிபாடத் திறனுமில்லை
உயிர் சுவாசமும், இதயதுடிப்பும் உள்ளவரை
என் உயிர் உன்னை ஒருபோதும் மறவாது




சிறு வித்தாய் என்னுள் நீ விழுந்தே
செந்தேன் மலர்க்கொத்தாய் விரிந்தாய்,
நட்பெனும் தேவசுகந்தத்தை நான் சுவாசிக்க
சுவாசக்காற்றாய் என்னுள் கலந்தாய்,
என்னையும் மணக்கும் சந்தனமாய்
உன் பொன் மார்பில் பூசி மகிழ்ந்தாய்,

மன்னவனே ஆருயிர் நண்பனே
கத்தும் கடலேழும் கருவான் நிலவும் சாட்சியாக
என் சித்தம், நினைப்புச், செய்கை உள்ளவரை
என் உள்ளம் உன்னை ஒரு போதும் மறவாது.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-22-04-2023

# கல்லூரி நட்பூ

---

மண்பூக்கும் வாசமலரெல்லாம் ஒரு மாலைக்குள் வாடிட
விண்பூக்கும் -வெள்ளி மலர்களும் விடியலில் மறைந்திட-
மனம் பூத்த நட்போ-நாளும் வண்ணமும், வாசமும் கூடி மணந்திட
நெஞ்சில் பூத்த அதிசய பூவாய் - எங்கள் கல்லூரி நட்பூ





என்னே வியப்பூ-நினைக்க-
நெஞ்சில் தோன்றும் ஆனந்தக் களிப்பூ
கூடிக்கதைபேசிட ஒரே கலகலப்பூ

தாயகம் வரும்போதெல்லாம் தவறாமல் சந்தித்து-
குசலம் விசாரித்து அகமகிழ ஆனந்து உறவாடும் நட்பு.
ஜெகன்-கலா-அன்னதாஸ்-ஷிரானி. கிறிஸ்-லூட்ஸ்-நவநீதன்-
நிலாந்தி-பெரேரா-மோகன்-சுபா

பிறந்த நாள் வாழ்த்துச் சொல்ல, ஆனந்தக் கூத்தாடும்
உறவாய் சாந்தி-மனோ தம்பதி, ஊர் வந்தால்
வீட்டிற்கு அழைத்து உண்ணத்தந்து உபசரிக்கும் தாயுள்ளம்
ஒன்றாய் கதைபேசி மகிழும் அன்னை இல்லம்.

தன் சுமையை மறைத்து-என் சுமையாற்ற-
ஆறுதல் மொழிந்த நண்பன் நவநீதன்-
காந்தி சதுக்கத்தில் பலமணி நேரம்
கதைபேசி உறவாடி மகிழ்ந்த இதய கீதம்.

அவசரமாய் வந்தும் என்னோடு உரையாடி
நட்போடு அணைத்து திரும்பிய அன்னதாஸ்
என் நகைச்சுவை கேட்டு
வாய்விட்டு சிரிக்கும் அன்புறவாய் ஷிரானி

***பண்போடு உறவாடி-பழகிய நட்பு***
***"என் ஆருயிர் உறவு" என்று***
***தன் குடும்பத்தை –குசேலன் எனக்கு***
***அறிமுகம் செய்த கண்ணனாய் நண்பன் ஜோய்***

தன் குழந்தைகளோடும், மனைவியோடும், என்னோடு
பிறந்த ஊரைச் சுற்றி மகிழ்ந்த உறவு, பிரியும்போது
தன் குழந்தைகள் என்னை அரவணைக்க, அப்பாவின்
அரிய நணபர் தந்தை போன்றவர் என்ற தாயுறவாய் மனைவி

கவிதை எழுதத்தூண்டிடும் நண்பனாய்
என் கவிதைகளின் முதல் இரசிகனாய்-கிறிஸ்
மன்னவன் அவையில்- என் கவிதைகள் அரங்கேற
மனம் மகிழ மழையாய் பொழியும் புகழுரைகள்.

கட்டித் தழுவி இதயம் மகிழ உயிரும் மெய்யும் குதிக்க
உறவு சொல்லும் ஜெகன்-எப்போதும் குடும்பப் பாசம்-
எல்லோர் மேலும் அளவில்லா நேசம்.
எம் நட்பை மறவாது-உரிமையோடு என்னை
கோபித்து பாராட்டும் கலா

காணும்போதெல்லாம்-நட்போடு
சுகம் விசாரிக்கும் சுந்தரி
என்னடா செய்ரா உரிமையோடு
கத்திக் கேட்கும்-நவாஸ்

நத்தார் வாழ்தனுப்பி-வரும்போது-ஊர்
வரமுடியாவிட்டாலும்-தொலைபேசியில் பேசி
அன்னையாய் அறிவுரை கூறும் நிலாந்தி

ஹய் Pax என்று கூவி நடுத்தெருவில் கட்டியணைத்து
ஊர் சுற்றி உறவாடி -வீடு வந்து கதைபேசி
கணவன் மனைவியாய் மகிழவைத்து
இன்பம் தந்த மோகன் சுபா தம்பதி

வாழ்வில் உங்களை நண்பர்களாய்ப் பெற
நான் செய்த தவமா இது-இல்லை இறை தந்த வரமே இது
எல்லாப் புகழும் இறைவனுக்கே.
நலம் வாழ வாழ்த்தும் நண்பன்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-1-6.2023*

# காவிய நட்பூ

-----------------------------------



உன் குரல் கேட்கும்போதெல்லாம்-நண்பா
என்னிதயத்திலோ தேன்மழை
உன் மடல் காணும்போதெல்லாம்
என் விழிகளிலோ ஆனந்தப் பூமழை




வண்ணப் பூவாய் என்னுள் மலர்ந்து-சுவாசக்காற்றாய்
என்னில் கலந்து-வாழ்வில் வசந்தம் தந்த இனிய உறவே
ஊமைக்குயிலும் உன் நட்பால் கவிபாடும் கோகிலமானது
ஊனமுற்ற கலாபமயிலும்-உன்னால் ஆனந்தக் கூத்தாடுது

கண்பார்த்து நெஞ்செழுதிய கல்லூாரி உறவே
மண்பார்த்து விண்பூக்கும் ஒளிமலர்களும்
விண்பார்த்து மண்பூக்கும் வாசமலர்களும் வாழும்வரை
இதயம் பூத்த நம் நட்போ வாடாது, உதிராது, வாசமிழக்காது
உயிருள்ளவரை, ஒருபோதும் உன்னை மறவாது

கண்வழி நுழைந்து என நெஞ்சில் கலந்திட்ட நட்புறவே
மண்ணோக்கி என் தேகம் வாடி வீழ்ந்தாலும்
விண்ணேகும் என் உயிரில் -உன் நட்பு
பூவாசம்போல்  மணக்கும் பூந்தேனாய் இனிக்கும்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-06-10-2023

# நண்பன்-ஜோய்

---



புல்லாய் கிடந்தேன், பனித்துளியாய் அணைத்தாய்
பூவாய் மலர்ந்தேன் தேனாய் கலந்தாய்
வானாய் விரிந்தேன், வெண்ணிலவாய் ஒளிர்ந்தாய்
வான்மழையாய் விழுந்தேன் மண்ணாய் நெகிழ்ந்தாய்



நதியாய் ஓடினேன், கடலாய் அணைத்தாய்
பாலையாய் வாடினேன் பூந்தென்றலாய் வந்தாய்-.
நண்பா நீயென்ன தேவனா? -இல்லை உன் நட்பு
ஏழை எனக்கு-இறையீந்த பெருங்கொடையா?

துன்பம் வந்தபோதெல்லாம்-துணையாய் நின்று
இருகரத்தால் அணைத்து என்னைக் காத்தாய்
தெய்வம் தந்த துணையே-உயிருள்ளவரை-என் நெஞ்சம்
உன்னை மறவாது, உன் புகழ் பாட மறவாது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-06-10-2023

# நட்பின் பெருமை

--------------------------------





பட்ட மரம் துளிர்க்காது, சுட்ட மண் ஒட்டாது
வெந்த வித்து முளைக்காது-கற்பில்லா
நட்பும் காலமெல்லாம் நிலைக்காது.

மூப்பு, பிணி, சாவில்லாத நட்பிற்கும் கற்புண்டு ,
பிடி அவலும் நட்பால் அருஞ்சுவையானது
குசேலனை வருத்திய வறுமைமை-கண்ணன்
நட்பால் நொடியில் குணமானது

தேரோட்டி மகனும் முடி சூடி நாடாள
சரியாசனம் தந்தது-துரியோதனன் நட்பு
தன்னுயிரையும் ஈந்து மகிழ்ந்தது
மாவீரன் கர்ணனின் நட்பு

நட்பிலோ உயர்வு தாழ்வு இல்லை
ஶ்ரீராமனும், குகனும் குலாவி மகிழத் தடையில்லை
மன்னனும், புலவனும் கொண்ட நட்பிற்கு-மாண்பாய்
கோப்பெருஞ்சோழன்-பிசிராந்தையர்

மரணமும் நட்பைப் பிரிக்குமோ என்றோ,
மன்னன் மடிந்தது கேட்டு- பிசிராதந்தைப் புலவரும்
வடக்கிருந்து உயிர் நீத்து காலனைப் பரிகாசித்தார்
நட்பை கற்பாய்க் காத்தார்

பாரியும், கபிலரும் பூண்ட நட்பு-மக்கள்
அங்கவை, சங்கவையை வாழவைக்க
ஔவையும் , அதியமானும் கொண்ட நட்பு
அரிய நெல்லிக்கனியை ஈந்து ஔவையைக் காக்க
நட்பினும் உயரியது பூவலகில் ஏது.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-06-10-2023*

# நட்பு



உண்மை நட்பில் பிரிவில்லை, பிரிவதும் உயர் நட்பில்லை
எண்ணில் பூச்சிமாய், இசையில் மௌனமாய்
ஆணவம் மறைந்து நிற்கும் அன்பே, உயர் நட்பு

குசேலனும் கண்ணனும், கர்ணனும் மன்னனும் கொண்டதும்
உயர் நட்பு, ஒருவரை ஒருவர் காணாது, கோப்பெருஞ்சோழனும்,
பிசிராந்தை அடிகளும் கொண்டதும் காவிய நட்பு
மடிந்த மன்னனுக்காய் புலவரும் வடக்கிருந்து உயிர் நீத்திட
வாழ்வு சாவு கடந்து வாழும் தெய்விக உறவாய் அன்பு



கம்பனும், சோழனும் கொண்ட. நட்பும் கலைந்த கனவானது
ஔவையும், அதியமானும் கொண்ட நட்பு
வாழும் கொடையானது.- உன்னோடு கொண்ட நட்போ
கற்பாய் நிலைக்குது, நெஞ்சம் இறைவனைப் புகழுது

குசேலனிடம் கண்ணன் காட்டிய நட்பு,
பிடி அவலிலும் இனிது, மனைவியை சேடியாக்கி
மன்னவன் புரிந்த தொண்டும் பெரிது.

நட்பிட்காய் சாதியம் கடந்த, மன்னவனாய்
துரியோதனன், நட்பிட்காய் உயிர் கொடுத்த
நண்பனாய் கர்ணன்

கோல், குடை, படை கொண்டு அரியணை அமர்ந்தாலும்
நட்பின்றி வாடிய மன்னன் தருமன்- பெருவள்ளலிற்கு
அரிய நண்பனாய், அன்பினால் இன்புற்ற மன்னன்
துரியோதனன், நட்பிலும் கற்புண்டு காவியச் சிறப்புண்டு

இறை தந்த கொடை நட்பு, அன்பை அள்ளி வழங்கும்
உன் மனமோ அட்சயபாத்திரமான உறவு
ஏழையரை வாழவைக்க அள்ளிக் கொடுக்கும் வள்ளல் நீ
உன் நிழலில் என்னை வைத்துக் காக்கும் பெருமகனும் நீ

பல்லாண்டு வாழ என் வாழ்த்துக்கள்
இறை தந்த கொடை நீ என்றே என் கவிதைகள்
காவியத்தில் வள்ளலைகளைப் படித்ததுண்டு-வள்ளலே
என் நண்பணாய் வாய்க்ககண்டு மனம் நன்றியால் துவளுதின்று

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-28-03-2024

# வள்ளல் என் நண்பன்





வள்ளல்களை இலக்கியத்தில் படித்தறிந்ததுண்டு
வள்ளலாய் வாழ்வில் கண்டதும், புலவனாய்
போற்றிப் பாடி மகிழ்வதும்
நன்பனே உன்னைத்தான் என் நண்பா

கொடுத்துச் சிவந்த உன் கரங்கள்-நாளும்
கொடையால் நிறைந்திட இறைவனை வேண்டி
இறை தந்த பெருங்கொடை நீ என்றே
உன்னைப் போற்றுகிறேன்



இறைவன் புரியும் பேரதிசயமாய்-ஏழை
என் வாழ்வில் உன் நட்பு
இயேசுவே என்னோடு உன் வடிவில்
நண்பனாய் உறவாடும் பேரன்பு

மயிலுக்குப் போர்வை கொடுத்தான் பேகன்
முல்லைக்கு தேரீந்தான் பாரி
இருப்பதற்கு நிழலாய் வீடு தந்த இம்மானுவேல்
இதயம் நிறைய ஆனந்தம் தரும் இனிய நண்பன் ஜோய்



உயிருள்ளவரை என் உள்ளம் உன்னை
ஒரு போதும் மறவாது, இறை கொடையே -நாளும் தந்தை
இறைவனுக்கும் நன்றி சொல்ல என் நெஞ்சம் மறவாது




நாளும் பொழுதும் நலமோடு வாழ-உன்
வாழ்வில் சகல சௌபாக்கியங்களும் நிறைய
நன்றியோடு இறைவனை-நாளும்
வேண்டும் என் இதயம்.

அரிய நட்பாய் பள்ளி வாழ்வில்
அன்பிறைவன் தந்த கொடையே-ஆருயிரே
முதுமை வந்தபோதும் மறவாத உன் அன்போ
என் நெஞ்சில் நிலைத்த அரிய முத்து

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29-09-2023